13th February 1959]

THE HON. SRI M. BHAKTAVATSALAM : (a) There was a proposal to give financial assistance to the Union. But it has been decided to be deferred.

(b) The financial assistance is intended for the installation of a Pasterization Plant in the Union.

### *Smal'pox*

* 318 Q.— SRI S. M. ANNAMALAI : கனம் ரெவினியு அமைச்சர் அவர்கள் தயவுசெய்து பதிலளிப்பாரா—

(அ) 1957–58-ல் வடாற்காடு மாவட்டம் போளூரில் அம்மை நோயினால் இறந்த குழந்தைகள், பெரியவர்கள் எத்தனை பேர் ?

(ஆ) அதைத் தடுக்க என்ன என்ன நடவடிக்கைகள் எடுக்கப்பட்டன ?

THE HON. SRI M. A. MANICKAVELU : (a) In 1957 two adults and in 1958 three adults and ninety-eight children died of smallpox in the Polur Panchayat.

(b) An intensive vaccination drive was carried out during 1958. Disinfection of infected premises and materials and health education were the other measures carried out.

SRI S. M. ANNAMALAI : சுமார் ஆயிரம் குழந்தைகளுக்கு மேல் இறந்திருக்கிறார்கள். இதில் சுகாதார அதிகாரிகள் சரிவர நடவடிக்கைகள் எடுக்கவில்லை. ரெவின்யூ அமைச்சர் அவர்கள் தலையிட்ட பின்னர்தான் சுகாதார அதிகாரிகள் நல்லமுறையில் நடவடிக்கைகள் எடுத்தார்கள். சுகாதார அதிகாரியினிடத்தில் சரியான ரிக்கார்ட் கிடையாது. பொது மக்கள், ஆயிரம் குழந்தைகளுக்கு மேல் இறந்திருப்பதாகச் சொல்கிறார்கள். ஆனால் சுகாதார அதிகாரிகள் 10, 20, 28, 98 என்றெல்லாம் கணக்குச் சொல்கிறார்கள். இதை சரியான முறையில் விசாரிக்க ஒரு கமிட்டி நியமிக்கப்படுமா ?

10-00 a.m.

THE HON. SRI M. A. MANICKAVELU : சிறிய அளவில் வித்தியாசம் இருந்தது என்றால் ஒப்புக்கொள்வேன். ஒரேயடியாக 98-யை ஆயிரம் என்று சொன்னால் அது முழுப்பூசணிக்காயை சோற்றில் மறைக்கும் சமாச்சாரமாகயிருக்கிறது. இதைப்பற்றி அங்கத்தினர் விவரம் கொடுத்தால் விசாரிக்கிறேன்.

MR. SPEAKER : இன்னும் இரண்டு கேள்விகள் இருக்கின்றன. மணி பத்தாகிவிட்டது. அதை இரண்டு நிமிடங்களில் முடித்துவிடலாம்.

### *Hospital Clothing for the Patients*

* 319 Q.—SRI V. SUBBIAH : கனம் ரெவினியு அமைச்சர் அவர்கள் தயவு செய்து பதிலளிப்பாரா—

சென்னை அரசாங்கத்தில் உள்ள வைத்தியசாலைகளில் நோயாளிகளுக்கு அளிக்கப்படும் உடைகளைக் கட்டாயமாக அணிந்துகொள்வதிலிருந்து சொந்த உடைகளை அணிந்துகொள்ள கட்டுப்பாடுகளைத் தளர்த்த உத்தேசம் ஏதேனும் உண்டா ?

THE HON. SRI M. A. MANICKAVELU : No, Sir.

SRI V. SUBRIAH : நாகரீகமும், படிப்பும் உள்ள கௌரவமான குடும்பத்திலுள்ள பெண்கள் இந்த உடையை உடுக்க மறுக்கிறார்கள். அவர்களுக்காவது விதிவிலக்கு அளிக்கப்படுமா ? அப்படி அவர்கள் கேட்டுக்கொண்டால் அதற்கு அனுமதி அளிக்கப்படுமா ?